உ

சிவமயம் 22

# ...ிகடுகம்.

மதுரைச்சங்கப்புலவருள் ஒருவராகிய

நல்லாதனாரால் இயற்றிய மூலமும்

உரையும்

மதுரைநாயக முதலியார்

குமாரர்

சொக்கலிங்க முதலியாரவர்களால்

செய்யப்பட்ட

அவதாரிகையும்

தெளிபொருள்விளக்கப்பொழிப்புரையும்

இவை

திருப்பரங்குன்றம்

அருணசலகாரணர்

குமாரர்

நாராயணகாரணரால்

தஞ்சை

ஸ்ரீ கிர்ஷ்ணவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை அணா 2.

உ

சிவமயம்.

# திரிகடுகம்.

மதுரைச்சங்கப்புலவருள் ஒருவராகிய

நல்லாதனாரால் இயற்றிய மூலமும்

உறையூர்

மதுரைநாயக முதலியாரவர்கள்

குமாரர்

சொக்கலிங்க முதலியாரவர்களால்

செய்யப்பட்ட

அவதாரிகையும்

தெளிபொருள்விளக்கப்பொழிப்புரையும்

இவை

திருப்பரங்குன்றம்

அருணாசலசரணர்

குமாரர்

நாராயணசரணரால்

தஞ்சை

ஸ்ரீ கிர்ஷ்ணவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சுபகிருது-ஷு கும்பரவி.

மதுரையிற் சங்கமருவிய சான்றோர்களால்
இயற்றிய
பதினெண்கீழ்க்கணக்கு நூல்களாவன.

## வெண்பா.

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி—மாமூல
மின்னிலை சொல்காஞ்சியுட னேலாதியென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.

நாலடியார்.
நான்மணிக்கடிகை.
இன்னாநாற்பது.
இனியவைநாற்பது.
கார்நாற்பது.
களவழிநாற்பது.
ஐந்திணையம்பது.
ஐந்திணையெழுபது.
திணைமொழியம்பது.
திணைமாலைநூற்றைம்பது.
திருக்குறள்.
திரிகடுகம்.
ஆசாரக்கோவை.
பழமொழி.
சிறுபஞ்சமூலம்.
முதுமொழிக்காஞ்சி.
ஏலாதி.
கைந்நிலை.

உ

# திரிகடுகம்.

## மூலமும் உரையும்.

### கடவுள்வாழ்த்து.

கண்ணகன்ஞாலமளந்ததூஉங்காமருசீர்த்
தண்ணறும்பூங்குருந்தஞ்சாய்த்ததூஉம்—நண்ணிய
மாயச்சகடமுதைத்ததூஉம்-இம்மூன்றும்
பூவைப்பூவண்ணனடி.

(இ-ள்.) காயாமலர்போலுநிறத்தையுடையதிருமாலினது திருவடிகள் இடமகன்றபூமியை அளந்ததும்-அழகியசிறப்பையுடையகுளிர்ந்தநல்லவாசனையுள்ள மலர்கள்பொருந்திய குருந்தமரத்தை முறித்ததும்-(கஞ்சனால் ஏவப்பட்டுத்தன்னை வருத்தக்) கிட்டிவந்தவஞ்சமாகியசகடத்தை உதைத்ததும் ஆகியஇம்மூன்றுசெய்கைகளையுஞ்செய்தன-எ-று.

## நூல்.

### (சுகம் அடையும் விதம்.)

அருந்ததிக்கற்பினார்தோளுந்திருந்திய
தொல்குடியின்மாண்டார்தொடர்ச்சியுஞ்—சொல்லின்
*அரிலகற்றுங்கேள்வியார்நட்பும்-இம்மூன்றுந்
திரிகடுகம்போலுமருந்து.

(இ-ள்.) அருந்ததிபோலும் கற்பினையுடையபெண்களது தோளும்-நல்லொழுக்கமுள்ளபழையகுடிப்பிறப்பிற்பிறந்துமா

ட்சிமையடைந்தவரோடுகொள்ளும்உறவும்-நூலினுள்ள்குற்றத்தை நீக்கவல்லநூற்கேள்வியையுடையாரோடு (செய்யப்படும்)சினேகமும் ஆகியஇம்மூன்றும்திரிகடுகத்தைப்போலும் துன்பம்நீக்கியின்பஞ்செய்வனவாம்-எ-று.

*அரில்-குற்றம்-அஃதாவது-முக்குணவசத்தால்முறைபிறழ்ந்துரைப்பர்? என்னுஞ்சூத்திரவிதிப்படி-தாமதம்-இராசதம்-சத்துவம்-என்னும்மூன்றுகுணங்களும் மாறிமாறிப்பிறத்தல் இயல்பாதலால் உயர்ந்தபொருளை இழிந்தோரும் - இழிந்தபொருளை உயர்ந்தோரும்-உறுதிப்பொருளைப்பகைவரும்-கெடுபொருளைநட்பினரும் சிலகாலங்களிற்கூறுவர்அதனுள் அவற்றின்குற்றத்தைநீக்கிக்குணத்தை தழுவவேண்டுமென்பது மேலோர்களின்கருத்தாம்-மேற்கூறியகுணங்கள்மூன்றனுள் -பேருண்டி-நெடுந்துயில் - சோம்பல்-நீதிவழு - ஒழுக்கவழு-வஞ்சம்-மறதி - பொய் - கோபம் - காமம்-கொலை-இவைகளை விளைவிப்பது-தாமதமாம். மனவூக்கம்-ஞானம்-வீரம்-தவம்-தருமம்-தானம் - கல்வி - கேள்வி - இவைகளைவிளைவிப்பது இராசதமாம்-இதனுள்-தானமென்பது கிரியையின்பொருட்டுக்கொடுக்கும்பொருள்கள். ஞானம்-அருள்-தவம்-பொறை-வாய்மை-மேன்மை-ஐம்பொறிஅடக்கல்- இவைகளைவிளைவிப்பதுசத்துவமாம். திரிகடுகமென்றது-சுக்கு-திப்பிலி-மிளகு-இம்மூன்றுங்கூடியவிடத்தில் தேகநோய்தீர்வதுபோல்இந்நூலின்கருத்தைஉட்கொள்வோர்க்குப்பிறவிநோய்தீருமென்பதுகருத்தாம். (க)

(மேலோர்களின் தன்மை.)

தன்குணங்குன்றாத்தகைமையுந்தாவில்சீ
ரின்குணத்தாரேவினசெய்தலும்—நன்குணர்வி
னான்மறையாளர்வழிச்செலவும்-இம்மூன்றும்
மேன்முறையாளர்தொழில்.

(இ-ள்.) தனது குடிப்பிறப்பின்குணம் குறைவுபடாமைக்குஏதுவாகியஒழுக்கமும்-கெடுதலில்லாதகீர்த்தியையுடைய இனியகுணத்தோர் ஏவியதொழில்களைச்செய்தலும்-நல்லறிவையறியும்அறிவுடைய அந்தணர்வகுத்தநூல்வழியில்நடத்தலும்ஆகியஇம்மூன்றும் - மேலாகியமுறையினையுடையவரது தொழில்களாம்-எ-று. (௨)

(மூடத்தன்மையால் விளையுந் துன்பம்.)

கல்லார்க்கினனாயொழுகலுங்காழ்கொண்ட
வில்லாளைக்கோலாற்புடைத்தலும்—இல்லஞ்
சிறியாரைக்கொண்டுபுகலும்-இம்மூன்றும்
அறியாமையால்வருங்கேடு.

(இ-ள்.) கற்றறிவில்லார்க்குஉறவினனாய்நடத்தலும்-மனவைரங்கொண்ட மனைவியைக்கோலினால் அடித்தலும்-தனது பிரகிர்த்தியத்தைச் சிற்றறிவினரைத் துணையாகக்கொண்டு நடத்தப்புகுதலும்ஆகியஇம்மூன்றும் அறிவின்மையாலேதனக்குவருங்கெடுதியைவிளைவிப்பனவாம்-எ-று. (௩)

(மரணத்தை விளைவிக்குஞ்செய்கை.)

பகைமுன்னர்வாழ்க்கைசெயலுந்தொகைநின்ற
பெற்றத்துட்கோலின்றிச்சேறலும்—முற்றனைக்
காய்வானைக்கைவாங்கிக்கோடலும்-இம்மூன்றும்
சாவவுறுவான்றொழில்.

(இ-ள்.) தன்பகைவர்முன்னே(பெருஞ்செல்வத்தோடு)வாழ்தலும்-கூட்டமாய்நின்றபசுக்களின் நடுவேகையிற்கோலில்லாமல்செல்லுதலும்-முன்னேநின்று (பிறரையன்றித்) தன்னையும்வருத்துவோனைத்தனக்கு உறவாக்கிக்கொள்ளுதலும்-ஆகியஇம்மூன்றும்-சாவவிரும்புகின்றவனதுசெய்கைகளாம்.

(துன்பம் விளைவிக்கும் விதம்.)

வழங்காத்துறையிழிந்துநீர்ப்போக்குமொப்ப
விழைவிலாப்பெண்டிர்தோள்சேர்வும்—உழந்து
விருந்தினனாய்வேற்றார்புகலும்-இம்மூன்றும்
அருந்துயரங்காட்டுநெறி.

(இ-ம்.) ஒருவருமநடவாத்துறையில் இறங்கிநீரில்நீந்திப்போதலும்-தனக்குஒப்பாகவிருப்பமில்லாத வேசையரதுதோளைச்சேர்தலும் - வருந்திவிருந்தாளியாய் அயலூரில்புகுதலும்-ஆகியஇம்மூன்றும் - ஒருவனுக்குஅரியதுன்பத்தைக்காண்பிக்கும்வழிகளாம்-எ-று. (ரு)

(புருடரின் அங்கம்.)

பிறர்தன்னைப்பேணுங்காணாணலும்பேணார்
திறன்வேறுகூறிற்பொறையும்—அறவினையைக்
காராண்மைபோலவொழுகலும்-இம்மூன்றும்
ஊராண்மையென்னுஞ்செருக்கு.

(இ-ள்.) அயலார்தன்னைஉபசரிக்கில்அதற்குநாணுதலும்-உபசரியாதவராய்த் தனதுதகுதியை வேறுபடச் சொன்னால் அதனைப்பொறுத்தலும்-உபகாரமாகியசெயலைமேகம்ஆளுதல்போல(அதனைஆளுதல்செய்து) நடத்தலும் - ஆகியஇம்மூன்றும்-ஊரிலுள்ளாரின்(மேற்பட்டுச்செய்கின்ற) ஆண்தன்மை என்னுஞ்செல்வங்களாம்-எ-று. (௬)

(பிரயோசனமில்லாதவை)

வாளைமீனுள்ளறலைப்படலுமாளல்லான்
செல்வக்குடியிற்பிறத்தலும்—பல்லவையுள்
அஞ்சுவான்கற்றவருநூலும்-இம்மூன்றுந்
துஞ்சூமன்கண்டகனா.

(இ-ள்.) வாளைமீனைப்பற்ற உள்ளான்பறவைமுயற்சிசெய்தலும்-ஆளுந்தன்மையில்லாதவன்செல்வமுள்ளகுடிப்பிறப்பிற் பிறந்துஒன்றனை ஆளநினைத்தலும்-பலர்கூடியசபையினிடத்துச் சென்றுபயப்படுகிறவன்கற்றுக் கொண்டஅருமையாகியநூலின்ஆராய்ச்சியும்-ஆகிய இம்மூன்றும்-நித்திரைசெய்கின்றஊமையானவன்கண்டகனவைப்போற்பயன்படாவாம்.

(தன்னைப்புகழாப்பொருள்கள்)

தொல்லவையுட்டோன் றுங்குடிமையுந்தொக்கிருந்த
நல்லவையுண்மேம்பட்டகல்வியும்—வெல்சமத்து
வேந்துவப்பவட்டார்த்தவென் றியும்-இம்மூன் றும்
தாந்தம்மைக்கூறுப்பொருள்.

(இ-ள்.) பழையோர்கூடிய சபையினிடத்து மேற்பட்டுத் தோன்றும்குடிப்பிறப்பும்-பெரியோர்கூடியிருந்தநல்லசபை யினிடத்துமேம்பட்டு விளங்கியகல்வியும்-வெல்லும்போரிடத்து (தம்மையாண்ட) அரசன் மகிழப்பகைவரைக் கொன்று நிறைத்தவெற்றியும் - ஆகியஇம்மூன்றும் - இவற்றையுடையோர்தம்மைத்தாமேவியந்து சொல்லப்படாத பொருள்களாம்-எ-று. (அ)

(மூடர்களின் விருப்பம்.)

பெருமையுடையாரினத்தினகற
லுரிமையில்பெண்டீராக்காமுற்றுவாழ்தல்
விழுமியவல்லதுணிதல்-இம்மூன் றும்
முழுமக்கள்காதலவை.

(இ-ள்.) பெருந்தன்மையுடையாருடையகூட்டத்தினின்றுநீங்குதலும் - தமக்கெனஉரிமையில்லாதவேசையைவிரும்பி அவரோடு வாழ்தலும் - மேன்மையல்லாத காரியங்களை (அதாவது தீயகாரியங்களென்றபடி) துணிந்து செய்தலும்-, ஆகியஇம்மூன்றும்-அறிவுநுழைய ஒருபுழையுமில்லாதமூடர்கள்இச்சிப்பவையாம்-எ-று. (கூ)

(நன்மையல்லாதவை.)

கணக்காயரில்லாதவூரும் பிணக்கறுக்கும்
மூத்தோரையில்லாவவைக்களனும்—பாத்துண்ணும
தன்மையிலாளரயலிருப்பும்-இம்மூன்றும்
நன்மைபயத்தலில.

(இ-ம்.) ஓதிவிப்பாரையில்லாதவூரும் - மாறுபாட்டைக்
கெடுக்கும் (அறிவிற்) பெரியோரையில்லாதசபையும்-பகுத்
துக்கொடுத்துண்ணும் குணமில்லாதவர்பக்கத்தில் இருத்த
லும் - ஆகியஇம்மூன்றும் (ஒருவனுக்கு) நன்மையைத்தரா
வாம்-எ-று. (௰)

(இயாவர்க்கும்போருந்தாதவை.)

விளியாதான் கூத்தாட்டுக்காணலும்விழக்
களியாதான் காவாதுரையுந்—தெளியாதான்
கூரையுட்பல்காலுஞ்சேறலும்-இம்மூன்றும்
ஊரெல்லாநோவதுடைத்து.

(இ-ள்) இராகவோசையில்லாதவன்(ஆட்டுவிக்கும்) கூத்
தினைப்போய்ப்பார்த்தலும் - (கையக்கால்) வீழக்கள்ளுண்டு-
களியாதவன்தன்னைக் காத்தல்செய்யாது (பிறரோடுவழுப்ப
டப்) பேசுதலும்- தன்னிடத்துத்தேர்ச்சியில்லாதவன்வீட்டி
னுள்பலதரம்போதலும் - ஆகியஇம்மூன்றும்- ஊரிலுள்ளா
ரெல்லோரும் நோவத்தக்ககுற்றத்தையுடையனவாம்-எறு.

(சுருக்கொடுக்கும்நட்பினர்.)

தாளாளனென்பான் கடன்படாவாழ்பவன்
வேளாளனென்பான் விருந்திருக்கவுண்ணுதான்
கோளாளனென்பான் மறவாதான்-இம்மூவர்
கேளாகவாழ்தலினிது.

(இ-ள்) முயற்சியுடையானென்றுசொல்லப்படுபவன் (பிறரிடத்தில்க்) கடன்படாமல்வாழ்கின்றவன் - உபகாரியென்றுசொல்லப்படுபவன்வந்த விருந்தினர்பசித்திருக்கத்தான் புசியாதவன்-(ஆசிரியன்சொல்லியநூற்பொருளை மனதில்)கொள்ளுதலில்வல்லவனென்று சொல்லப்படுபவன் - (கேட்டவற்றை) மறவாதவன்-ஆகிய இம்மூவரையும் தனக்குநட்பினராக (ஒருவன்கொண்டு) வாழ்தல்இன்பந்தருவனவாம்-எ-று ம்உ

தாள்- முயற்சி-கோள்-கொள்ளுந்தன்மை வேளாளன்-உபகாரி.

(அருமையுடையோர்.)

சீலமறிவானிளங்கிளைசாலக்
குடியோம்பல்வல்லானரசன்—வடுவின்றி
மாண்டகுணத்தான்றவசியென்றிம்மூவர்
யாண்டும்பெறற்கரியார்.

(இ-ள்) பிறர்தன்மையைத்தெரிந்து அதற்கேற்க நடக்கவல்லவன் இளமைதொட்டுவந்த உறவினனுவான் - மிகவும் குடிகளைக்காத்தலில் வல்லவன்மன்னவனுவான் - முக்குற்றமில்லாமல் மாட்சிமைப்பட்ட குணத்தையுடைய வந்தவமுடையவனுவான்-என்றுசொல்லப்பட்ட இம்மூவரும்-எவ்விடத்தும்-பெறுதற்கு அரியராவார்-எ-று. (யரு)

(அறிவுடையோர் பழகத்தகாதவர்)

இழுக்கலியல்பிற்றிளமைபழித்தலை
சொல்லுதல்வற்றாகும்பேதைமையாண்டுஞ்
செறுவொடுநிற்குஞ்சிறுமை-இம்மூன்றும்
குறுகாரறிவுடையார்.

(இ-ள்.) இளமைப்பருவமுடையோன் (தன்னிலையினின்றும்) வழுவுதலை இயல்பாகவுடையவனாவான் - அறிவில்லோன் (அறிவுடையோரால்) விலக்கப்பட்டவைகளை (நீதி யெனச்) சொல்லுதலில்வல்லனாவான்-கல்வியிற்சிறியன் எவ்விடத்துங்கோபித்தலோடுநிற்பன் (ஆதலால்) இம்மூவரையும் அறிவினையுடையோர்சேரார்-எ-று. (௰௪)

(சிநேகத்திற்கு அருகரல்லாதவர்.)

பொய்வழங்கிவாழும்பொறியறையுங்கைதிரிந்து
தாழ்விடத்துநேர்கருதுந்தட்டையும்—ஊழினா
லொட்டிவினைநலம்பார்ப்பானும்-இம்மூவர்
நட்கப்படாதவர்.

(இ-ள்.) பொய்பேசிஉயிர்வாழ்கின்றசெல்வமில்லாதவனும் - ஒழுக்கத்தினின்றும் வேறுபட்டுத்தாழ்ந்தவிடத்தில் (தன்னிற்றாழ்ந்தவனைத்தனக்கு) நேராக நினைக்கின்ற மூங்கிற்போல புரைபட்டமனத்தனும்- (ஒருவனைச்சேரும்) முறைமையாற் சேர்ந்து அவன்காரியத்தில்த்தனக்குப்பயனை ஆராய்பவனும்- ஆகியஇம்மூவரும்யாவராலும்சிநேகிக்கப்படாதவராவார். ()

(இறந்தும் இறவாதவர்.)

மண்ணின்மேல்வான்புகழ்நட்டானுமாசில்சீர்ப்
பெண்ணினுட்கற்புடையாட்பெற்றானும்—உண்ணுநீர்
கூவல்குறைவின்றித்தொட்டானும்-இம்மூவர்
சாவாவுடம்பெய்தினர்.

(இ-ள்.) மண்ணுலகத்திற்பெரியபுகழைநிலைபெறச்செய்தவனும்-பெண்களுள்குற்றமில்லாத கீர்த்தியையுங்கற்பையும் உடையவளைத்தனக்குமனைவியாகப்பெற்றவனும்-ஊராலுண்ணப்படுகின்ற நீர்க்குறைவில்லாதிருக்குங்கிணறுகளைத் தோண்டிவைத்தவனும்-ஆகியஇம்மூவரும் - இறவாதபுகழுடம்பைப்பெற்றவராவார்-எ-று. (௰௬)

(கல்வியின்பயனை இழந்தவர்.)

மூப்பின்கணன்மைக்ககன்றானுங்கற்புடையாட்
பூப்பின்கட்சாராத்தலைமகனும்—வாய்ப்பகையுட்
சொல்வென்றிவேண்டுமிலிங்கியும்-இம்மூவர்
கல்விப்புணைகைவிட்டார்.

(இ-ள்.) மூப்புவந்தவிடத்துந்துறவறத்திற்கு (அஞ்சி)நீங்கினவனும் - கற்பினையுடையமனைவிபூத்துநீராடியவிடத்து அவளைச்சேராதகணவனும் - வாயாற்பகைகொள்ளும்விதண்டாவாதியினிடத்துச்சென்றுபேசுஞ்சொல்லில்வெற்றிபெற விரும்புந்தவவேடத்தானும்-ஆகிய இம்மூவரும்-(பிறவிக்கடலைக்கடத்தும்ஞானமாகிய)தெப்பத்தைக்கைவிட்டவராவர்.

(இயாவராலும் அஞ்சப்படுபவை.)

ஒருதலையான்வந்துறூஉமூப்பும்புணர்ந்தார்க்
கிருதலையுமின்னாப்பிரிவும்—உருவினை
உள்ளுருக்கித்தின்னும்பெரும்பிணியும்இம்மூன்றும்
கள்வரின் அஞ்சப்படும்.

(இ-ள்.) நிச்சயமாகவந்து அடையும்கிழப்பருவமும்-தம்மு ட்கூடினார்க்கு இரண்டிடத்தும் துன்பஞ்செய்கின்றபிரிவும்- உடம்பினைஉள்ளுருகச்செய்துதின்னுகின்றபெரியவியாதியும் ஆகியஇம்மூன்றும்-திருடர்போலஒருவரால்அஞ்சப்படுபவை களாம்-எ-று. (௰அ)

(மரணத்தையுண்டுபண்ணுந் தொழில்கள்.)

கொல்யானைக்கோடுங்குணமிலியுமெல்லிற்
பிறனில் கடைநின்றொழுகுவானு—மறந்தெரியா
தாடும்பாம்பாட்டுமறிவிலியும்-இம்மூவர்
நாடுங்காற்றூங்குபவர்.

(இ-ள்.) கொல்லுந்தொழிலையுடைய மதயானைக்குமுன் செல்லும்குணமில்லானும் - இரவின்கண்பிறனதுவாயிலினி னறு(அவன்மனையாளைவிரும்பி) நடப்பவனும்-கொலைசெய்யு மென்பதையறியாமல்ஆடுகின்ற பாம்பினைஆட்டுகின்றதிறிவி ல்லானும்-ஆகியஇம்மூவரும் ஆராயுமிடத்து (அவ்வவற்றால்) இறப்பவராவார்.

(பிறர் வருந்தமடைபவை)

ஆசைபிறன்கட்படுதலும்பாசம்
பசிப்படமடியைக்கொளலும்—கதித்தொருவன்
கல்லானென்றெள்ளப்படுதலும்-இம்மூன்றும்
எல்லார்க்குமின்னாதன.

(இ-ள்.) பிறனதுபொருளில்ஆசையுண்டாதலும் - (தன்) சுற்றத்தார்பசித்திருக்கச்சோம்பலடைதலும் - ஒருவனைக்கற்றிலனென்றுகோபித்து இகழப்படுதலும்- ஆகியஇம்மூன்றும்-யாவர்க்கும் துன்பஞ் செய்வனவாம்-எ-று. (உ0)

(நல்லோர்களின் தன்மை.)

வருவாயுட்கால்வழங்கிவாழ்தல்செருவாய்ப்பச்
செய்தவைநாடாச்சிறப்புடைமை—எய்திப்
பலநாடிநல்லவைகற்றல்-இம்மூன்றும்
நலமாட்சிநல்லவர்கோள்.

(இ-ள்.) (தமக்குவரும்ஊதிபத்துள்) காற்கூறு (தருமத்தின்பொருட்டு) செலவுசெய்து உயிர்வாழ்தலும்-போரில்வெற்றிகிடைக்கஅரசர்(தமக்குத்துணையாயினோர்க்கு)செய்தகாரியங்களை ஆராயாமல் (விளங்கித்தோன்றும்) சிறப்புடைத்தாதற்றன்மையும் - பலநூலுள்பொருந்த ஆராய்ந்துநல்லநூல்களைக்கற்றலும்-ஆகியஇம்மூன்றும்-நற்குணநற்செய்கைகளால் பெருமைபெற்றநல்லவருடையகொள்கைகளாம்-எ-று. (உக)

(முத்தியடையும்விதம்.)

பற்றென்னும்பாசத்தளையும்பலவழியும்
பற்றறுதோடுமவாத்தேரும்—தெற்றெனப்
பொய்த்துரையென்னும்பகையிருளும்-இம்மூன்றும்
வித்தறவீடும்பிறப்பு.

(இ-ள்.) (அகப்பற்றுப்புறப்பற்றென்னும்) இருவகைப் பற்றென்று சொல்லப்படுகிறகயிற்றுவிலங்கும் - பலபொருள்களிலும்பிடிப்புநீங்காமல் ஓடுகின்றஆசையாகிய ரதமும்-தெளிவாகப்பொய்த்துக்கூறும் சொல்லாகிய பகையைவிளைவிக்கும்அந்தகாரமும்-ஆகியஇம்மூன்றும்-பிறவிக்குவித்தாகும்-அவைகெடப்பிறப்புக்கெடும்-எ-று. (உஉ)

(தருமம் தன்னைவிட்டு நீங்காவிதம்)

தானங்கொடுக்குந்தகைமையுமானத்தார்
குற்றங்கடிந்தவொழுக்கமும்—தெற்றெனப்
பல்பொருணீங்கியசிந்தையும்-இம்மூன்றும்
நல்வினையார்க்குங்கயிறு.

(இ-ள்.) (பிறர்க்கு) தானமாகப் பொருள்கொடுக்குங்குணமும் - பழிக்குநாணுவோரது குற்றத்தைநீக்கியநல்லொழுக்கமும் - தெளியபலபொருள்களிலும் (செல்லுதலொழிந்த) நினைவும் - ஆகியஇம்மூன்றும் - (ஒருவனை) தருமச்செய்கை (தன்னைவிட்டகலாதிருக்கும்படி) சட்டுங்கயிறும்-எ-று. ()

(நரகிற்புகுமார்க்கம்.)

காண்டகுமென்றோட்கணிகைவாயின்சொல்லுந்
தூண்டிலினுட்பொதிந்ததேரையு—மாண்டசீர்க்
காழ்த்தபகைவர்வணக்கமும்-இம்மூன்றும்
ஆழ்ச்சிப்படுக்குமளறு.

(இ - ள்.) காணுதற்கினிய மெல்லியதோள்களையுடைய வேசையினதுவாயிலுள்ளஇனியசொல்லும் - தூண்டிலினிடத்து (மீனுக்குஇரையாக) அதன்முள்ளைமூடியதவளையும் வைரம்பற்றிய சத்துருக்களுடைய மாட்சிமைப்பட்ட சிறப்பினையுடையவணக்கமும்-ஆகியஇம்மூன்றும்- (உயிர்களைத் தம்முள்) அழுந்தச்செய்யும்நரகங்கள்போல்வனவாம். (உச)

(விவேகிகளால் விரும்பப்படாத செல்வமுடையோர்.)

செருக்கினால்வாழுஞ்சிறியவனும்*பைத்தகன்ற
அல்குல்விலைபகருமாய்தொடியு—நல்லவர்க்கு
வைத்தவறப்புறங்கொன்றானும்-இம்மூவர்
*கைத்துண்ணார்கற்றறிந்தார்.

(இ-ள்.) அகங்காரத்தால் (தன்னிலைகெட) வாழ்கின்ற கீழ்மகனும் - பாம்பின் படம்போற்பரந்தஅல்குலைவிலைக்கு விற்கும்வேசையும்-நல்லோர்பொருட்டாகஅமைத்துவைத்த தருமச்சாலையைஅழித்தவனும் - ஆகியஇம்மூவருடையபொருளைஅறநூலைக்கற்றுணர்ந்தவர்உண்ணமாட்டார்-எ-று. ()

*பை-பாம்பின்படம் *கைத்து-பொருள்.

(யாவராலும்புகழப்படுபவர்.)

ஒல்வதறியும்விருந்தினனுமாருயிரைக்
கொல்வதிடைநீக்கிவாழ்வானும்—வல்லிதிற்
சீலமினிதுடையவாசானும்-இம்மூவர்
ஞாலமெனப்படுவார்.

(இ-ள்.) பிறருடையதளர்வையறிந்து (பெற்றதுகொண்டு) மகிழும்அதிதியும்-அரியவுயிரைப்பிறர் கொல்லுமிடத்து நடுவேபுகுந்துதடுத்துவாழ்பவனும்-உறுதியாக மேற்கொண்டவொழுக்கத்தினை இனிதாகவுடையஆசிரியனும் -ஆகிய இம் மூவரும் - உயர்ந்தோரென்றுசொல்லப்படுபவராவார்-எ-று

(பரிசுத்தமுடையோர்.)

உண்பொழுதுநீராடியுண்டலுமென்பெறினும்
பால்பற்றிச்சொல்லாவிடுதலுந்—தோல்வற்றிச்
சாயினுஞ்சான்றாண்மைகுன்றாமை-இம்மூன்றும்
தூஉயமென்பார்தொழில்.

(இ-ள்.) உண்ணுதற்குரியகாலத்தில் ஸ்நானஞ்செய்துஉண்ணுதலும்-யாதுபயன்பெற்றாலும் ஒருசார்பாகநின்றுஒன்று சொல்லாதிருத்தலும் - (உணவில்லாமையால்) உடம்புஉலர்ந்துஇறத்தல்வரினும் அறிவால்நிறைந்த தன்மைகுறைவுபடாமல்நடத்தலும் - ஆகியஇம்மூன்றும் - (யாம்மனம்மொழிமெய்களால்) பரிசுத்தராக்கடவோமென்றுநினைப்பவருடையசெய்கைகளாம்-எ-று. (உஎ)

(பயன் பெறாதுதுன்புறுவோர்)

வெல்வதுவேண்டிவெகுண்டுரைக்குநோன்பிலியும்
இல்லதுகாமுற்றிருப்பானுங்கல்வி
செவிக்குற்றம்பார்த்திருப்பானும்-இம்மூவர்
உமிக்குத்திக்கைவருந்துவார்.

(இ-ள்.) சொல்வெற்றியைவிரும்பிப்பிறரோடுகோபித்துச் சொல்லுகின்றதவமில்லானும் - தனக்குக் கிடைத்தற்கரிய பொருளைப்பெற விருப்பப்பட்டிருக்கின்றவனும் - (பிறன் கற்ற) கல்வியிற்குற்றங்களையேகேள்வியால் ஆராய்ந்திருக்கின்றவனும் - ஆகியஇம்மூவரும் -உமியைக்குத்திக்கைசலிக்கின்றவனையொப்பார்-எ-று. (௨௮)

(மேலோர்களின் கருத்து)

பெண்விழைந்துபின்செலினுந்தன்செலவிற்குன்றாமை
கண்விழைந்துகையுறினுங்காதல்பொருட்கின்மை
மண்விழைந்துவாழ்நாண்மதியாமை-இம்மூன்றும்
நுண்விழைந்தநூலவர்நோக்கு.

(இ-ள்.) பெண்கள்தன்னைவிரும்பிப்பின்சென்றாலும் தனதுநன்னடையிற்குறைவுபடாமையும் - தன்னிடஞ்சேரவிரும்பிப்(பிறனதுபொருள்வந்து)கைவசப்படினும்அப்பொருளினிடத்துஆசையில்லாமையும் மண்ணாட்சியைவிரும்பிவாழ்கின்றநாள்நேரிட்டவிடத்தும் -அவ்வாட்சியைமதியாமையும் ஆகியஇம்மூன்றும் - நுட்பமாகியபொருளைவிரும்பிய நூலாராய்ச்சியையுடையோரதுகருத்தாம்-எ-று. (௨௯)

(கேடாதகீர்த்தியையுடையோர்)

தன்னச்சிச்சென்றாரையெள்ளாவொருவனும்
மன்னியசெல்வத்துப்பொச்சாப்புநீத்தானும்
என்றுமழுக்காறிகந்தானும்-இம்மூவர்
நின்றபுகழுடையார்.

(இ-ள்.) தன்னைவிரும்பிவந்து அடைந்தயாசகரை இகழாத ஒப்பில்லாதவனும் - நிலையானசெல்வம்பெற்றகாலத்து (நட்பினரை) மறக்குந்தன்மையைநீக்கினவனும் - எப்போதும் (பிறர்செல்வங்கண்டு) பொறாமையினின்றுநீங்கினவனும் - ஆகிய இம்மூவரும்நிலைபெற்றகீர்த்தியையுடையவராவார்-எ-று.

(இயாவரும்விரும்பத்தக்கவை)

பல்லவையுணல்லவைகற்றலும்பாத்துண்டாங்
கில்லறமுட்டாதியற்றலும்—வல்லிதிற்
றாளிலொருபொருளாக்கலும்-இம்மூன்றுங்
கேள்வியுளெல்லாந்தலை.

(இ-ள்.) பலசபைகளாலும்நல்லனவென்றுசொல்லப்படும் அரியநூல்களைப்படித்தலும் - பகுத்துண்டு இல்லறத்தைக்குறைவுபடாமற்செய்தலும் - தன்வல்லமையாலும்முயற்சியினாலும்யாதாயினும்ஒருபொருளைச்செய்துகொள்ளலும் - ஆகிய இம்மூன்றும்கேட்கப்பட்டசெயல்பலவற்றுள்ளும்முதன்மையானசெயல்களாம்-எ-று. (௩௧)

(கல்வியுடையோர் கொள்கை)

நுண்மொழிநோக்கிப்பொருள்கொளலு நூற்கேலா
வெண்மொழிவேண்டினுஞ்சொல்லாமை— நன்மொழி
சிற்றினமல்லார்கட்சொல்லலும்-இம்மூன்றும் [யைச்
கற்றறிந்தார்பூண்டகடன்.

(இ-ள்.) (நூல்களிலுள்ள)சொற்களை ஆராய்ந்து நுட்பமாகியபொருளைக்கொள்ளுதலும்- நூல்களுக்குத்தகாதவெளிப்படையாகியசொல்லைப் பிறர்விரும்பினும் சொல்லாதொழிதலும்- (உயிர்க்குறுதியைத்தரும்) நல்லசொற்களைக்கீழ்மக்களல்லாதாரிடத்துச்சொல்லுதலும்-ஆகிய இம்மூன்றும்-பல்நூல்களையுங்கற்றறிந்தவர்மேற்கொண்டகடமையாம்-எ-று. ()

(அரசனால் விரும்பப்படுபவர்)

கோலஞ்சிவாழுங்குடியுங்குடிதழீஇ
யாலம்வீழ்போலுமமைச்சனும்—வேலின்
கடைமணிபோற்றிண்ணியான்காப்பும்இம்மூன்றும்
படைவேந்தன்பற்றுவிடல்.

(இ-ள்.) தனதுசெங்கோலைப்பயந்து வாழாநின்ற குடிகளும் - அக்குடிகளைத்தழுவி ஆலம்விழுதுபோலத் தாங்கும் மந்திரியும் - வேலினிடத்துள்ள பூண்போலவன்மையுடையான்தன்னைக்காத்தலும் - ஆகியஇம்மூன்றையும்சேனையையுடையஅரசன்(சிறிதும்)கைவிடாதுகாக்கக்கடவன் எ-று.

(உயர்வுடையோர்)

*மூன்றுகடன்கழித்தபார்ப்பானுமோர்ந்து
முறைநிலைகோடாவரசும்—சிறைநின்
றலவலையில்லாக்குடியும்-இம்மூவர்
உலகமெனப்படுவார்.

(இ-ள்) மூன்றுவகையாயுள்ளகடன்களையும்செய்துமுடித்தமறையவனும் - (மனுநூலை) ஆராய்ந்துநீதிநிலையில்மாறுபடாதஅரசனும்-(அவ்வரசனாற்செய்யப்பட்ட)காவலில்அஞ்சிநின்றுபுலம்புதலில்லாதகுடியும் - ஆகியஇம்மூவரும்-உயர்ந்தோரென்றுசொல்லப்படுவார்-எ-று. (௩௪)

*மூன்றுகடன்-தேவர்களுக்குவேள்வியாலும் - முனிவர்களுக்குக்கேள்வியாலும்-பிதிரர்களுக்கு - மகப்பெறுதலாலுஞ்செய்யுங்கிரிகைகளாம்.

(முத்தியினிலைமையடைந்தவர்)

*முந்நீர்த்திரையினெழுந்தியங்காமேதையும்
நுண்ணூற்பெருங்கேள்விநாற்கரைகண்டானும்
மைநீர்மையின்றிமயலறுப்பான்-இம்மூவர்
மெய்நீர்மைமேனிற்பவர்.

(இ-ள்) சமுத்திரத்தின்அலைபோல(விடயங்களின்) மேற்சென்றுமனம்அலையாத்அறிவையுடையவனும்- நுட்பமாகிய அறிவுநூல்களைமிகுந்தகேள்வியினாலறிந்துஉண்மைநூலினதுமுடிவைக்கண்டவனும்-குற்றமாகியகுணத்தையில்லாமல்ஆசைமயக்கினைஅறுப்பவனும் - ஆகியஇம்மூவரும்-மெய்க்குணத்தையுடையமோட்சத்தில்நிற்பவராவர்-எ-று. (௩௫)

*முந்நீர்-ஆற்றுநீர்-ஊற்றுநீர்-வேற்றுநீர்.

(அவரவர்களின் அறிவுநிலைமை.)

ஊனுண் டுயிர்கட் கருளுடையேமென் பானுந்
தானுடன் பாடின் றிவினை யாக்குமென் பானுங்
காமுறுவேள்வியிற்கொல்வானும்-இம்மூவர்
தாமறிவர் தாங்கண்டவாறு.

(இ-ள்.) ஒன்றனை தயாமிசத்தைப்புசித்துஉயிர்களிடத்துக் கிருபையுடையேமென்றுசொல்பவனும்-தான்(யாதொரு முயற்சியிலும்) உடன்படுதலில்லாமலூழ்எல்லாஞ்செய்யு மென்றுசொல்பவனும்-காமியத்தையடைவிக்கும்யாகத்திலொருயிரைக்கொல்பவனும்-ஆகியஇம்மூவரும்-(தமக்கு) புலப்பட்டவிதத்தையேஅறிகின்றவராவார்-எ-று. (கசு)

(மேலோர்களின்ஒழுங்கு.)

குறளையுணட்பளவுதோன் றுமுறலினிய
சால்பினிற்றோன் றுங்குடிமையும்—பால்போலும்
தூய்மையுட்டோன் றும்பிரமாணம்-இம்மூன் றும்
வாய்மையுடையார்வழக்கு.

(இ-ள்.) செல்வச்சுருக்கத்தினால்ஒருவனதுசிநேகத்தின் வரம்புகாணப்படும்-பொருந்துதற்கு இனிதாகியநற்குணங்களினிறைவினால்குடிப்பிறப்பின்தன்மைகாணப்படும்- பால் போன்றபரிசுத்தகுணத்தால்அவனதுநிலைமை காணப்படும்- ஆகியஇம்மூன்றும் - மெய்நெறியையுடையாரது ஒழுங்குகளாம்-எ-று. (கஎ)

## (செல்வமிழக்குங்குணங்கள்)

தன்னை வியந்து தருக்கலுந் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலு—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையும்-இம்மூன்றுஞ்
செல்வமுடைக்கும் படை.

(இ-ள்.) தன்னைத்தானே மெச்சிக்கொண்டு அகங்கரித்தலும் - பணிவில்லாமல் வீணாகக்கோபத்தைப்பெருகச்செய்தலும் - முற்பட்ட (பிறருடைய) பலவகையானபொருளை விரும்புகின்ற அற்பக்குணமும் - ஆகிய இம்மூன்றும் ஒருவனது செல்வத்தை அழிக்கின்ற ஆயுதங்களாம்-எ-று. (௩௪)

## (ஒழுங்கில்லாதவர்களின் செய்கை.)

புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த் தோய்தல்
கலமயக்கங் கள்ளுண்டு வாழ்தல்—சொலைமுனிந்து
பொய்ம்மயக்கஞ் சூதின்கட் டங்கல்-இம்மூன்றும்
நன்மையிலாளர் தொழில்.

(இ-ள்.) நீசத்தன்மையோடு கலத்தலாவது விலைமாதரை விரும்பித்தோய்தலாம்- பிறர் எச்சிற்கலத்தோடு கலத்தலாவது மதுவுண்டு வாழ்தலாம்- பெரியோர்சொல்லை வெறுத்துப் பொய்யோடு கலத்தலாவது சூதாடுமிடங்களில் தங்குதலாம் - ஆகிய இம்மூன்று செயலும்-தருமமில்லாத செய்கைகளாம்-எ-று.

(பேரறிவுடையோர் செய்கை.)

வெகுளிநுணுக்கும்விறலுமகளிர்கட்
கொத்தவொழுக்கமுடைமையும்—பாத்துண்ணும்
நல்லறிவாண்மைதலைப்படலும்-இம்மூன்றும்
தொல்லறிவாளர்தொழில்.

(இ-ள்.) (ஒன்றன்மேல்)கோபித்தலைச்சுருக்குகின்றவல்லமையும் - தம்பெண்டிர்க்குப்பொருந்தியஒழுக்கத்தையுடைத்தாந்தன்மையும்(பிதிரர்முதலியோர்க்குப்) பங்கிட்டுஉண்ணுகின்றநல்லறிவைஆளுதற்றன்மையைக்கூடுதலும்-ஆகியஇம்மூன்றும்இயற்கையறிவுடையோரதுதொழில்களாம்-எ-று.

(மேன்மைதங்கிய தருமம்.)

அலர்ந்தார்க்கொன் றீந்தபுகழுந் துளங்கினுந்
தன்குடிமைகுன்றாத்தகைமையும்—அன்போடி
நாளுநட்டார்ப்பெருக்கலும்-இம்மூன்றும்
கேள்வியுளெல்லாந்தலை.

(இ-ள்.) (வறுமையால்)வருந்தியிரந்தோர்க்கு(அவர்விரும்பிய)ஒருபொருளைக்கொடுத்தலாகியபுகழுடைமையும்- (இன்மையால்) வருந்தினாலும்தனது்குடிப்பிறப்பின்றன்மைக்குக்குறைவுபடாதநற்குணமுடைத்தாந்தன்மையும்- அன்போடுபலநாளுஞ்சென்றுசினேகித்தவரைப்பெருகச்செய்தலும் - ஆகியஇம்மூன்றும் - கேட்கப்படும்அறம்பலவற்றுள்ளும்முதன்மையானதருமங்களாம்-எ-று. (சக)

(உபகாரமுடைய குடிப்பிறந்தார் தன்மை.

கழகத்தால்வந்தபொருள்காமுறாமை
பழகினும்பார்ப்பாரைத்தீப்போலொழுகல்
உழவின்கட்காமுற்றுவாழ்தல்-இம்மூன்றும்
அழகென்பவேளான்குடிக்கு.

(இ-ள்) சூதால்வருகின்றபொருளைவெறுத்தலும்-அந்தணரோடு(பலநாளும்)பழகினும்நெருப்பைப்போல்அவரை அஞ்சிநடத்தலும்-பயிர்செய்தலில்விரும்பிவாழ்தலும்- ஆகிய இம்மூன்றையும்வேளாண்மையுடையகுடிப்பிறந்தார்க்கு அழகென்றுசொல்லுவார்-எ-று. (சஉ)

(வஞ்சம் நீங்கிய பொருள்.)

வாயினடங்குதறுப்புரவாமாசற்ற
செய்கையடங்குதறிப்பியமாம்—பொய்யின்றி
நெஞ்சமடங்குதல்வீடாகும்-இம்மூன்றும்
வஞ்சத்திற்றீர்ந்தபொருள்.

(இ-ள்) வாக்கால்(ஒருவன்)அடங்கிநடத்தல் (இகத்திற்குரிய) செல்வத்தைத்தருவதாம் -சரீரத்தொழிலில் (ஒருவன்) அடங்கிநடத்தல்குற்றமில்லாததெய்வப்பிறப்பைத்தருவதாம் பொய்யில்லாமல்மனத்தால்(ஒருவன்) அடங்கிநடத்தல்முத்தியைத்தருவதாம்-ஆகியஇம்மூன்றும்வஞ்சனையினின்று நீங்கியபொருள்களாம்-எ-று. (சரு)

(அறிவுடையோர் துன்புறுநாட்கள்.)

விருந்தின் றியுண்டபக லுந்திருந் திழையார்
புல்லப்புடைபெயராக் கங்குலு மில்லார்க்கொன்
றீயா தொழிந்தகன் றகாலையும்-இம்மூன் றும்
நோயேபுர னுடையார்க்கு.

(இ-ள்.) விருந்தினரில்லாமற்புசிக்கக்கழிந்ததினமும்-திருந்திய ஆபரணத்தையுடையபெண்கள் அநுபவிக்கக்*கழியாத இராப்பொழுதும் - தரித்திரர்க்குஒருபொருளைக் கொடாதிருந்தநாளும்-ஆகிய இம்மூன்றும்அறிவுடையோர்க்குத்துன்பஞ் செய்வனவாம்-எ-று. *கழி- மிகுதி. (சச)

(நரகத்திற்காளாகின்றவர்)

ஆற்றுனையாற்றென் றலைப்பானு மன்பின்றி
யேற்றார்க்கியைவகரப்பானுங்—கூற்றம்
வரவுண்மைசிந்தியா தானும்-இம்மூவர்
நிரயத்துச்சென் றுவீழ்வார்.

(இ-ள்.) (ஒருகாரியம்)செய்யவன்மையில்லாதவனை அவற்றைச்செய்யென்றுசொல்லிவருத்துகின்றவனும் - இரப்பவரிடத்தில் அன்பில்லாமல்தனக்கிசைந்த பொருளைக் கொடாது ஒளிக்கின்றவனும்-இயமன்வருதலேஉண்மையென் றுநினையாதவனும் - ஆகிய இம்மூவரும்நரகத்திற்போய் அழுந்துவாரென்பதாம்-எ-று. (சரு)

(உண்மைப்பொருளை அறிந்தவர்.)

வைததனையின்சொல்லாக்கொள்வானுநெய்பெய்த
சோறென்றுகூழைமதிப்பானும்—ஊறிய
கைப்பதனைக்கட்டியென் றுண்பானும்-இம்மூவர்
மெய்ப்பொருள்கண்டுவாழ்வார்.

(இ-ள்) (ஒருவன்) வைதவசவுகளை இனிய சொல்லாகக் கொள்ளுகின்றவனும்-தான்பெற்றகூழினைநெய்வார்த்த சோறென்றுமதிக்கின்றவனும்-மிகுந்தகைப்புடையஉணவைவெல்லமென்றுஉண்ணுகின்றவனும்-ஆகிய இம்மூவரும் மெய்ப்பொருளின்தன்மையைஅறிந்துவாழ்பவராவார்-எ-று. (உஅ)

இச்செய்யுளின்கருத்து-(க-வது)உலகத்தைச் செயித்தல்-(உ-வது) சரீரஅபிமானம்விடுதல்-(ங-வது) இந்திரியமடக்குதல்-என்றுபொருள்கொள்க.

(இம்மைப்பயனை இழந்தவர்.)

ஏவாதுமாற்றுமிளங்கிளையுங்காவாது
வைதெள்ளிச்சொல்லுந்தலைமகனும்--பொய்தெள்ளி
யம்மனைதேய்க்குமனையாளும்-இம்மூவர்
இம்மைக்குறுதியில்லார்.

(இ-ள்.) (பிதாவினால்) ஏவாத காரியத்தையும் செய்கின்ற புதல்வரும்-(மனைவியைப்) பாதுகாவாது வைது இகழ்ந்துபேசுகின்றநாயகனும்-பொய்யானசெயல்களைத்தெளிந்து (தான் வாழ்கின்ற) வீட்டிலுள்ள பொருளை அழிக்கும்மனையாளும்-ஆகியஇம்மூவரும்இப்பிறப்பிற்குவேண்டும் உறுதிப்பயனைத் (தம்மைப்பெற்றோர்)இலராகச்செய்தலுமன்றித்தாமுமிலராவார்-எ-று. (உகூ)

(மழைத்த விரோதிகள்.)

கொள்பொருள்வெஃகிக்குடியலைக்கும்வேந்தனும்
உள்பொருள்சொல்லாச்சலமொழிமாந்தரும்
இல்லிருந்தெல்லைகடப்பாளும்—இம்மூவர்
வல்லேமழையறுக்குங்கோள்.

(இ-ள்.) தான்கொள்ளும்பொருளை விரும்பிக்குடிகளை வருத்தாநின்றஅரசனும்— (உற்றாரோடு) உண்மைப்பொருளைச் சொல்லாதுபொய்யைச் சொல்லுகின்றமனிதரும் - வீட்டின் கண்ணிருந்து (தனக்குரிய) வரம்பைக்கடக்குமனையாளும் - ஆகிய இம்மூவரும் - விரைந்துமழையைக்குறைக்குங்கிரகங்களாம்-எ-று. (ருஎ)

(ஒருவரையறியுந்தன்மை.)

தூர்ந்தொழுகிக்கண்ணுந்துணைகடுணைகளே
சார்ந்தொழுகிக்கண்ணுஞ்சலவர்சலவரே
ஈர்ந்தகலினுக்கயவரிவர்மூவர்
தேர்ந்தக்காற்றோன்றும்பொருள்.

(இ-ள்.) (வருவாய்)அடைபட்டொழுகிக்கண்ணும்(ஒருவன் வருத்தப்பட்டு) திரியினுந்துணையாவார்சுற்றத்தாரேயாவார் மனங்கலந்துநடக்கினுமனவைரமுடையோர் பகைவரேயாவார்-பிளக்கப்பட்டகல்லைப்போலுங்கடினமனமுள்ளோர்துன்பத்தைச்செய்யுங்கீழ்மக்களேயாவார் - (ஆகிய) இவர்மூவரும் ஆராயில் காணப்படும்பொருள்களாம்-எ-று. (ருக)

(நுண்ணறிவுடையோர் கொள்கை.)

கண்ணுக்கணிகலங்கண்ணோட்டங்காமுற்ற
பெண்ணுக்கணிகலநாணுடைமை—நண்ணும்
மறுமைக்கணிகலங்கல்வி-இம்மூன்றுங்
குறியுடையார்கண்ணேயுள.

(இ-ள்) கண்களுக்கு ஆபரணமாவது தாட்சண்யமுடைமையாம்-(தம்கணவரால்) விரும்பப்பட்ட பெண்களுக்குஆபரணமாவதுவெட்கமுடைமையாம்-வருகின்றமறு பிறப்பிற்கு ஆபரணமாவது வித்தையுடைமையாம்- ஆகியஇம்மூன்றும்-இயற்கையறிவினையுடையவரிடத்தேஉளவாம்-எ-று. (௩௨)

(பிறரார்ப்பழிக்கும்எண்ணமுடையோர்)

குருடன்மனையாளழகுமிருடீரக்
கற்றறிவில்லான்கதழ்ந்துரையும்—பற்றிய
பண்ணிற்றெறியாதான்யாழ்கேட்டும்-இம்மூன்றும்
எண்ணிற்றெறியாப்பொருள்.

(இ-ள்.) அந்தகனுடையமனைவியினது அழகும்-மயக்கந்தீர அறிவுநூலைக்கற்று (அதன்பொருளை) அறிதலில்லாதவன் விரைந்துசொல்லுகின்றசொல்லும்- விரும்பப்பட்டஇசைநூலிற்பயிற்சியில்லாதவன்வீணையினதுஓசையைக்கேட்டலும்-ஆகியஇம்மூன்றும்ஆராயுமிடத்து(அம்மூவர்க்கும்)தெரியப்படாதபொருள்களாம்-எ-று. (௩௩)

(பேறறிவில்லாதவர்.)

தன்பயன் றாக்காரைச்சார் தலுந்தாம்பயவா
நன்பயன் காய்வின் கட்கூறலும்— பின்பயவாக்
குற்றம்பிறர்மேலுரைத்தலும்-இம்மூன்றும்
தெற்றெனவில்லார்தொழில்.

(இ-ள்) தனக்குவரும்பயனை ஆராய்ந்து அதற்குஉதவிசெய்யாதவனைஅடுத்துவாழ்தலும் - கோபஞ்செய்கின்றவிடத்தில் (தாம்) பயன்படாத நல்லஉறுதிச்சொற்களைச் சொல்லுதலும் (அப்போதுபயன்படினும்) பின்னேபயன்படாதகுற்றங்களைப் பிறர்மேற் சொல்லுதலும்-ஆகியஇம்மூவரும்-தெளிவில்லாதஅறிவினையுடையாரதுதொழில்களாம்-எ-று. (௩௪)

(ஏவலாளரின்றன்மை)

அருமறைகாவாதநட்டும்பெருமையை [லுஞ்
வேண்டாதுவிட்டொழிந்தபெண்பாலும்—யாண்டா
செற்றங்கொண்டாடுஞ்சிறுதொழும்பும்-இம்மூவர்
ஒற்றுளெனப்படுவார்.

(இ-ள்.) வெளிப்படுத்தற்கரிய இரகசியத்தைக்காப்பாற்றா நட்பாளனும்-பெருமைக்குணத்தை விரும்பாதுவிட்டுநீங்கியபெண்ணும்-எப்போதும்மனவைரங்கொண்டிருக்கின்றகுற்றேவலாளனும்-ஆகியஇம்மூவரும்- ஒற்றுளென்றுசொல்லப்படுபவராவார்-எ-று. (௩௫)

(நன்மார்க்கம் குறைவுபடாதவிதம்)

முந்தையெழுத்தின் வரவுணர்ந்துபிற்பாடு
தந்தையுந்தாயும்வழிபட்டு-வந்த
வொழுக்கம்பெருநெறிசேர்தல்-இம்மூன்றும்
விழுப்பநெறி தூராதவாறு.

(இ-ள்.) இளமைப்பருவத்தில்நூலினது அறிவுண்டாதலும்—அதன்பின்பு அந்நூற்பொருளையறிதலால்தகப்பனையும் தாயையும்பூசித்துவந்தஒழுக்கமுடைமையும்- பெரியோரதுவழியை(அதனாற்)சேர்தலும் ஆகியஇம்மூன்றும்-உயர்வைத்தரும் வழியைஅடைக்காதவிதங்களாம்-எ-று. (௫௬)

(கேட்போர்க்கு வருத்தம்விளைவிக்குஞ்செய்கை)

கொட்டியளந்தமையாப்பாடலுந்தட்டித்துப்
பிச்சைபுக்குண்பான்பிளிற்றலுந்துச்சிருந்தான்
ஆளுங்கலங்காமுறுதலும்-இம்மூன்றுங்
கேள்வியுளின்னாதன.

(இ-ள்) தாளவோசையை அளவுசெய்து(அதற்குத்தகும்படி)பாடாதபாட்டும்-கையைத்தட்டிச்சோற்றுப்பிச்சைக்குப் புகுந்துவாங்கியுண்பவனுடையஆரவாரிப்பும்- ஒதுக்குக்குடியிருந்தவன்(உரியோன்) ஆளுகின்ற பாத்திரங்களை இச்சித்தலும்ஆகியஇம்மூன்றும் கேட்கப்படுபவைகளுள் இனிமையாகாதனவாம்-எ-று. (௫௭)

(இராசகுமாரன்செய்கை.)

பழமையைநோக்கியளித்தல்கிழமையாற்
கேளிருவப்பத்தழுவுதல்—கேளிராய்த்
துன்னியசொல்லாலினந்திரட்டல்-இம்மூன்றும்
மன்னற்கிளையான்றொழில்.

(இ-ள்.) நெடுங்காலமாகப்பழகிவருந்தொடர்ச்சியை ஆராய்ந்து (அத்தொடர்ச்சியுடையவரை) காப்பாற்றலும் (செய்யும் உரிமையால்) சுற்றத்தார் மகிழும்படி (அவரை) தழுவுதலும்-(தனக்குநட்பாளராய்ச்சூழ) இனியசொல்லால்நல்லினத்தைச்சேர்த்தலும்- ஆகியஇம்மூன்றும்இளவரசனதுதொழில்களாம்-எ-று. (௫அ)

(நாளுக்குநாளாய்க்குறைவுறுஞ்செல்வம்)

கிளைஞர்க்குதவாதான்செல்வமும்பைங்கூழ்
விளைவின்கட்போற்றானுழவும்—இளையனாய்க்
கள்ளுண்டுவாழ்வான்குடிமையும்-இம்மூன்றும்
உள்ளனபோலக்கெடும்.

(இ-ள்.) சுற்றத்தார்க்குஉதவிசெய்யாதவனதுபொருளும் பசியபயிரை (தனக்கு) பயன்கொடுக்குமிடத்தில் பாதுகாக்கமுடியாதவனுடையஉழவுதொழிலும்-இளமைப்பருவமுடையவனாயிருந்தும் மதுவுண்டுவாழ்கின்றவனுடையகுடிப்பிறப்பும் - ஆகியஇம்மூன்றும்நிலைநிற்பனபோலத்தோன்றிப் பின்னேஅழிந்துவிடும்-எ-று. (௫௯)

(துக்கசென்மங்கள்.)

பேய்ப்பிறப்பிற்பெரும்பசியும்பாஅய்
விலங்கின்பிறப்பின்வெருவும்—புலந்தெரியா
மக்கட்பிறப்பினிரப்பிடும்பை-இம்மூன்றுந்
துக்கப்பிறப்பாய்விடும்.

(இ-ள்.) பேயினது பிறப்பில் பெரிய பசியால் (வருகின்ற இடும்பையும்) பாயாநின்றமிருகத்தினது பிறப்பில் அச்சத்தால் வருந்துன்பமும் - மானிடப்பிறப்பில் அறிவை மழுங்கச்செய்கின்றவறுமையால்வருந் துன்பமும்-ஆகிய இம்மூன்றும் துன்பத்திற்கு ஏதுவாகியபிறப்புக்களாய்முடியும்-எ-று. (௬0)

பாய்கின்றமிருகம்-சிம்மம்.

(மேன்மைதங்கியமந்திரியின்தன்மை.)

ஐயறிவுந்தம்மையடையவொழுகுதல்
எய்துவதெய்தாமைமுற்காத்தல்—வைகலும்
மாறேற்குமன்னர்நிலையறிதல்-இம்மூன்றும்
சீரேற்றபேரமைச்சர்கோள்.

(இ-ள்.) ஐம்பொறியறிவுகளும்தமக்குவசப்பட்டுநிற்கநடத்தலும் - அரசனுக்குவருவதாகியஆபத்தைவராமல்முன்னறிந்துபாதுகாத்தலும்-எப்பொழுதும் பகைமையைமேற்கொள்ளுகின்றஅரசர்களுடையநிலைமையை அறிதலும்-ஆகியஇம்மூன்றும்கீர்த்தியை மேற்கொண்ட பெருமைபொருந்தியமந்திரிகளது கொள்கைகளாம்-எ-று. (௬௧)

(புத்திரப்பேறுடையாதவர்.)

நன்றிப்பயன்றாக்கா நாணிலியுஞ்சான்றோர்முன்
மன்றிற்கொடும்பாடுரைப்பானு—நன்றின்றி
வைத்தவடைக்கலங்கொள்வானும்-இம்மூவர்
எச்சமிழந்துவாழ்வார்.

(இ-ள்.) (ஒருவர்செய்த)உதவியின்பிரயோசனத்தைஅள ந்தறியாதவெட்கமில்லாதவனும்-பெரியோர்முன்னேசபையி னிடத்துக்கொடியசொற்களைச்சொல்லுகின்றவனும்-நற்செய் கையில்லாமல்அடைக்கலமாக (ஒருவர்வைத்தபொருளை)அபக ரிக்கின்றவனும்-ஆகியஇம்மூவரும் (தமக்குப்பின்) சந்தானத் தையிழந்துவாழ்கின்றவராவார்-எ-று. (௬௨)

(பிறர்க்குநன்மையைத்தராதவைகள்.)

நேர்வஞ்சாதாரோடுநட்பும்விருந்தஞ்சும்
பீர்வளையையில்லத்திருத்தலுஞ்—சீர்பயவாத்
தன்மையிலாளரயலிருப்பும்-இம்மூன்றும்
நன்மைபயத்தலில.

(இ-ள்.) (தனக்குவரும்)வருத்தத்தைஅஞ்சிவாராமற்பாது காவாரோடுகொண்டசினேகமும்-விருந்தினரைக்கண்டுஅஞ் சுகின்றமனைவியைவீட்டில்வைத்துக்கொண்டுவாழ்தலும்-சிற ப்பைத்தராதகுணத்தையுடையஇல்வாழ்வார்க்குப்பக்கத்தில் இருத்தலும் - ஆகியஇம்மூன்றும்-ஒருவனுக்கு நன்மையைத் தருதலில்லையாம்-எ-று. (௬௩)

(பதிவிரதையின் அங்கம்.)

நல்விருந்தோம்பலின் நட்டாளாம்வைகலும்
இல்புறஞ்செய்தலினீன்றதாய்—தொல்குடியின்
மக்கட்பெறலின் மனைக்கிழத்தி-இம்மூன்றுங்
கற்புடையாள்பூண்டகடன்.

(இ-ள்.) நல்லவிருந்தினரைப் பாதுகாத்தலால் சினேகமுடையளாம் - இல்லறத்தைக்காப்பாற்றுதலாற்பெற்றதாயாம் தன்பழயகுடிக்குப்புதல்வரைப்பெறலால்மனைவியாம் - ஆகிய இம்மூன்றுசெயலும்கற்பினையுடைய பெண்கள் மேற்கொண்டகடமைகளாம்-எ-று. (௩௪)

(தன்புத்தியால்வருந்துகின்றவர்.)

அச்சம்அலைகடலிற்றோன்றலுமார்வுற்ற
விட்டகலகில்லாதவேட்கையுங்—கட்டிய
மெய்ந்நிலைகாணுவெகுளியும்-இம்மூன்றும்
தந்நெய்யிற்றும்பொரியுமாறு.

(இ-ள்.) அலைகள்அலைக்கும்கடல்போல(அளவில்லாத)பயமானது (தன் மனத்தில்) தோன்றலும் - (அநுபவித்தசுகங்களை)விட்டுநீங்கமாட்டாதஆசையும் (பெரியோரால்) உறுதியாகத்தழுவப்பட்ட (நூலினது) மெய்ப்பொருளைக்காணவொட்டாதகோபமும்-ஆகியஇம்மூன்றும் தம்மிடத்துப்பிறந்தநெய்யிலே(ஆடுமுதலானவை) தாம்பொரியும்விதம்போல (அச்சமுதலியமூன்றும்) தம்மிடத்துப்பிறந்து தம்மைவேவச்செய்வனவாம்-எ-று. (௩௫)

(பெருமையைத்தராதனவைகள்.)

கொழுநனை யில்லாள் கறையும்வழிநிற்குஞ்
சிற்றாளில்லா தான் கைமோதிரமும்— பற்றிய
கோல்கோடிவாழுமரசனும்-இம்மூன்றும்
சால்போடுபட்டதில.

இ-ள்.) கணவனை யில்லாதவளது மாதருதவும்- (தன் ஏவலின்) வழியில்நிற்கின்றசிற்றாளனை யில்லாதவனது கையிலிடப்பட்டமோதிரமும்- (தான்)பிடித்தசெங்கோலைக்கொடுங்கோலாகநடத்திவாழாநின்றமன்னவனும்-ஆகிய இம்மூன்றும் பெருமையோடுபொருந்தியசிறப்பைஉடையனஇல்லையாம். ()

(பரிகரிக்கப்படாதவை.)

எதிர்நிற்கும்பெண்ணுமியல்பில்தொழும்புஞ்
செயிர்நிற்குஞ்சுற்றமுமாகி— மயிர்நரைப்ப
முந்தைப்பழவினையாய்த்தின்னும்-இவைமூன்றும்
நொந்தார்செயக்கிடந்ததில்.

(இ-ள்) (தான்கோபித்தால்) தன்னெதிர்நின்றுபேசுகின்ற மனையாளும் - ஒழுக்கமில்லாதஏவற்றொழிலுடையவனும்(மனத்தில்) வைரம்போகாதுநிற்கும் சுற்றமுமெனப்பெயர்கொண்டுமுற்காலத்துச்செய்துவிட்ட பழவினைப்பயனும்த் தனதுமயிர்நரைக்கும் அளவும்வருத்துகின்றநோயும் - (ஆகிய)இப்பொருள்மூன்றிற்கும்மனம்நொந்தவர்செய்யக்கிடந்தபரிகாரமில்லையாம்-எ-று. (௬௭)

(நன்மைதெரிந்தவரிடத்துஉள்ளபொருள்கள்.)

இல்லார்க்கொன் றீயுமுடைமையுமிவ்வுலகில்
நில்லாமையுள்ளுநெறிப்பாடும்—எவ்வுயிர்க்குந்
துன்புறுவசெய்யாததூய்மையும்-இம்மூன்றும்
நன்றறியுமாந்தர்க்குள.

(இ-ள்.) தரித்திரர்க்குஒரு பொருளைக்கொடுக்கும்செல்வமுடைமையும் - இவ்வுலகத்தில் (உண்டானபொருள்களினுடைய) நிலைமையைவிசாரித்து அறியும்ஒழியின்கண்ணேசெல்லுதலும்-எவ்வகைப்பட்டஉயிர்களுக்கும்துன்பம்பொருந்தியகாரியங்களைச்செய்யாதபரிசுத்தகுணமும் - ஆகியஇம்மூன்றும் தருமநூல்வழியை அறிகின்ற மனிதர்களுக்கு உள்ளனவாம்-எ-று. (௩அ)

(கிடைத்தற்குஅரியபொருள்.)

அருந்தொழிலாற்றும்பகடுந்திருந்திய
மெய்ந்நிறைந்துநீடிருந்தகன்னியு-நொந்து
நெறிமாறிவந்தவிருந்தும்-இம்மூன்றும்
பெறுமாறரியபொருள்.

(இ-ள்) அரியதொழிலைச்செய்யவல்லகடாவும்-திருந்திய அவயவம்நிரம்பிநெடுங்காலம் (மணமில்லாது) இருந்தகன்னிகையும்-மனம்வருந்திவழிதப்பிவந்த நல்லவிருந்தினனும்-ஆகியஇம்மூன்றும் (ஒருவர்) பெறுதற்குஅருமையாகியபொருள்களாம்-எ-று. (௩௯)

(பிறரால்புகழப்படுஞ்செல்வமுடையோர்)

காவோடறக்குளந்தொட்டானுநாவினால்
வேதங்கரைகண்டபார்ப்பானுந்- தீதிகந்
தொல்வதுபார்த்துண்ணுமொருவனும்-இம்மூவர்
செல்வரெனப்படுவார்.

(இ-ள்) சோலையைவைத்துத்தருமத்தின்பொருட்டுக்குளத்தைத்தோண்டினவனும் - நாவால்வேதங்களை ஓதி (அவற்றின்) வரம்பைஅறிந்தஅந்தணனும் - தீயவழியைக்கடந்து (தனக்கு)கிடைத்ததை(பிதிர்முதலியோர்க்கு) பங்கிட்டுஉண்ணுகின்றஒருவனும்-ஆகிய இம்மூவரும்செல்வத்தையுடையவரென்றுசொல்லப்படுவோர்-எ-று. (௭௫)

(இயாவராலும்பார்க்கப்படாதவர்.)

உடுத்தாடையில்லாதார்நீராட்டும்பெண்டிர்
தொடுத்தாண்டவைப்போர்புகலுங் —கொடுத்தளிக்
ஆண்மையுடையவர்நல்குரவும்-இம்மூன்றும் [கும்
காணவரியவென்கண்.

(இ-ள்) உடுக்கப்பட்டவஸ்திரம்இல்லாதஒருவர்நீராடுதலையும் - பெண்கள் (வழக்கு தொடுத்துச்சபையின்கண்சண்டைசெய்யப்புகுதலையும்-(பிறர்க்கு)கொடுத்துப்பாதுகாக்கின்றஆண்தன்மையையுடையவரதுவறுமையையும் - ஆகியஇம்மூன்றினையும்எனதுகண்கள்பார்க்கத்தகுவனவல்லவாம். ()

(சந்தேகமில்லாதவை.)

நிறைநெஞ்சுடையானை நல்குரவஞ்சும்
அறனை நினைப்பானை யல்பொருளஞ்சும்
மறவனை யெவ்வுயிருமஞ்சும்-இம்மூன்றும்
திறவதிற் றீர்ந்தபொருள்.

(இ-ள்.) (புலன்களின் வழியே செல்லாது) நிறுத்தலையுடைய மனத்தனை வறுமையானது அஞ்சாநிற்கும் (எப்பொழுதும்) தருமத்தை நினைப்பவனைப் பாவமானது அஞ்சாநிற்கும்-(நீங்காது) கொலைத்தொழிலுடையோனை எல்லாவுயிர்களும் அஞ்சாநிற்கும் (ஆதலால்) இம்மூன்று அச்சமும் வேறுபாட்டின் நீங்கித் தம்முள் ஒத்த பொருள்களாம்-எ-று, (௭௨)

(அவாவினாற்பயனடையாதவர்.)

இரந்துகொண்டொண்பொருள் செய்வமென்பானும்
பரந்தொழுகும் பெண்பாலைப் பாசமென்பானும்
விரிகடலூடு செல்வானும்-இம்மூவர்
அரியதுணிந்து வாழ்வார்.

(இ-ள்.) (பிறரை) இரந்து (அவரிடம் பிச்சையை வாங்கி) ஒள்ளிய செல்வப்பொருளை ஆக்குவேனென்று கருதுகின்றவனும்-(பலரிடத்தும்) வியாபித்துச் செல்லுகின்ற வேசையை (தன்னிடத்து) அன்புடையவளென்று கருதுகின்றவனும்- விரிந்த கடலினிடத்து (பொருளினது இச்சையின் பொருட்டு மரக்கலத்தின் மேல்) செல்லுகின்றவனும்-ஆகிய இம்மூவரும் தமக்கு முடியாத காரியங்களைச் செய்யத் துணிந்து வாழ்கின்றவராவார் எ-று.

(பிரயோசனமில்லாதவர்.)

கொலைநின் றுதின்றொழுகுவானும்பெரியவர்
புல்லுங்காற்றான்புல்லும்பேதையும் — இல்லெனக்
றீகென்பவனைநகுவானும்-இம்மூவர் [கொன்
யாதுங்கடைப்பிடியாதார்.

(இ-ள்) கொலைத்தொழிலின்கண்ணேநின்று (ஒருயிரை வதைத்துஅதனிறைச்சியை) தின்றுசீவிப்பவனும் (தன்னினும்)பெரியோர்தன்னைத்தழுவுங்காலத்தில்தானும் (அவரை எதிரே) தழுவுகின்றஅறிவில்லாதவனும்-எனக்குஒருபொருளுமில்லைகொடுக்கக்கடவாயென்றுஇரப்பவனைப்பரிகாசஞ் செய்பவனும்-ஆகியஇம்மூவரும் -இயாதொருதருமத்தையும் உறுதியாகப்பற்றாதவராவார்-எ-று. (எச)

(இயாவரும் விரும்பத்தக்கவை.)

வள்ளன்மைபூண்டான்கட்செல்வமும்உள்ளத்
துணர்வுடையானோதியநூலும்—புணர்வின்கட்
டக்கதறியுந்தலைமகனும்-இம்மூன்றும்
பொத்தின்றிக்காழ்த்தமரம்.

(இ-ள்.) வரையாதுகொடுக்குந்தன்மையைஆபரணமாகப் பூண்டவனிடத்தேகூடியபொருளும் -மனத்தில்அறிவினையுடையான்கற்றகல்வியும் (பிறர்)தன்னைச்சார்ந்தவிடத்தில் (அவர்க்கு) செய்த்தக்ககாரியத்தைஅறிகின்றதலைவனும்ஆகிய இம்மூன்றும்பொந்தில்லாமல்வைரம்பற்றியமரம்போல்இயாவரும்விரும்பப்படுவார்-எ-று. (எரு)

(பாதுகாக்கக் கூடாமையுடையோர்.)

மாரிநாள்வந்தவிருந்துமனம்பிறிதாய்க்
காரியத்திற்குன்றுக்கணிகையும்—வீரியத்து
மாற்றமறுத்துரைக்குஞ்சேவகனும்-இம்மூன்றும்
போற்றற்கரியார்புரிந்து.

(இ-ள்.) மழைக்காலத்தில்வந்தவிருந்தினரும்-(தன்)மனம்வேறுபட்டுநிற்கத் தன்காரியஞ்செய்தலில் குறைவுபடாத வேசையும்-வீரங்காட்டும்போரில் (அரசனது)சொல்லைமறுத்துப்பேசுகின்றசுத்தவீரனும்-ஆகிய இம்மூவரையும் விரும்பிப் பாதுபார்த்தற்கு அரியராவார்-எ-று. (எசு)

(குற்றமற்ற குடிப்பிறப்பினரின் கோள்கை.)

கயவரைக்கையிகந்துவாழ்தல்நயவரை
நள்ளிருளுங்கைவிடாநட்டொழுகல்—தெள்ளி
வடுவானவாராமற்காத்தல்-இம்மூன்றும்
குடிமாசிலார்க்கேயுள

(இ-ள்.) கீழ்மக்களைக்கைவிட்டுவாழ்தலும்-நீதியுடையவர்களைப்பாதியிரவிலுங்கைவிடாமற்சினேகித்துநடத்தலும்- ஆராய்ந்து(தனக்கு)குற்றமானகாரியங்கள்வாராவொட்டாமற்பாதுகாத்தலும்-ஆகிய இம்மூன்றும் — குடிப்பிறப்பிற்குற்றமில்லாதவர்க்கேஉண்டாம்-எ-று. (எஎ)

(தவமுதிர்ச்சியுடையோர்.)

தூய்மையுடைமைதுணிவாந்தொழில்*கற்றம்
வாய்மையுடைமைவனப்பாகுந்தீமை
மனத்தினும்வாயினுஞ்சொல்லாமை-இம்மூன்றும்
தவத்திற்றருக்கினார்கோள்.

(இ-ள்.) பரிசுத்தமுடையவனாயிருந்தலும் - (பெரியோரால்) துணியப்பட்ட நற்செய்கைகளை விரிக்கின்ற சத்தியமுடையவனாயிருத்தலும் - தீயசெயல்களைமனத்தால்நினையாமலும்வாயாற்பேசாதிருத்தலும்-ஆகிய இம்மூன்றும்அழகாகிய தவத்தினாற்செருக்கின்றவர்களுடையகொள்கைகளாம். அகற்றல்-விரித்தல்- (எஅ)

(அறிவுடையோர் வருந்தும்படி சீவிப்பவர்.)

பழிபஞ்சான்வாழும்பசுவுமழிவினாற்
கொண்டவருந்தவம்விட்டானும்—கொண்டிருந்
தில்லஞ்சிவாழுமெருதுமிவர்மூவர்
நெல்லுண்டநெஞ்சிற்கோர்நோய்.

(இ-ள்.) (உலகம்)பழிக்கும்பழியைஅஞ்சாமல்நடக்கும்பசுப்போல்பவனும்-(செல்வக்கேடுதியால்த்தான்)மேற்கொண்ட அரியதவத்தைக்கைவிட்டவனும்-' தனக்குஉடன்பட்டவளாக) கொண்டிருந்து சும்மனைவிக்கிஅஞ்சிநடக்கின்றஎருதுபோல்வானும்-ஆகியஇவர்மூவரும் (மக்கள்உண்ணக்கடவதாகிய சோற்றை) உண்ணுதல் (அறிவுடையோர் மனதிற்குஒரு நோய்செய்வனவாம்-எ-று. (எகூ)

(மூன்றுந்த வாதவை.)

முறைசெய்யான்பெற்றதலைமையுநெஞ்சில்
நிறையிலான்கொண்டதவமும்—நிறையொழுக்கந்
தேற்றாதான்பெற்றவனப்பும்-இம்மூன்றும்
தூற்றின்கட்டுவியவித்து.

(இ-ள்) முறையறிந்துசெய்யமாட்டாதவன் அடைந்தயசமானத்துவமும்-மனத்தை (புலன்களின்வழியேசெல்லாமல்) நிறுத்துதலை யில்லாதவன்மேற்கொண்டதவமும் - நிறைந்த வேதத்தினதுஒழுக்கத்தைத்தெளிந்துநடவாதவன் அடைந்த அழகும் - ஆகியஇம்மூன்றும் - புதரில்விதைத் தவிதைபோலப்பயன்படாவாம்-எ-று. (அ௰)

(பேராசையுடையோர்.)

தோள்வழங்கிவாழுந்துறைபோற்கணிகையும்
நாள்கழகம்பார்க்குநயமிலாச்சூதனும்
வாசிகொண்டொண்பொருள்செய்வானும்-இம்மூவர்
ஆசைக்கடலுளாழ்வார்.

(இ-ள்.) (பலர்க்கும்பொதுவாய்நின்று தன்னிடத்துள்ள நீரைக்கொடுக்கும்) துறைபோல (தன்னைவிரும்பியயாவர்க்கும்) தனதுதோளைக்கொடுத்து (உயிர்) வாழுகின்றவேசையும்- எந்நாளும்சூதாடுமிடத்தைப்பார்த்துச்செல்லுகின்றநீதியில்லாத சூதாட்டமுடையவனும் - வட்டம்வாங்கிஒள்ளியபொருளைத்தேடுவானும்ஆகியஇம்மூவரும்ஆசையாகியசமுத்திரத்தில்அமிழ்ந்துவார்-எ-று. (அக)

(உயர்வுடையோரால் நன்கு மதிக்கப்படுபவர்.)

சான்றருட்சான்றனெனப்படுதலெஞ்ஞான்றுந்
தோய்ந்தாருட்டோய்ந்தானெனப்படுதல்.பாய்ந்தெ
கொள்ளாருட்கொள்ளாதகூறாமைஇம்மூன் [மூந்து
நல்லாள்வழங்குநெறி. [றும்]

இ-ள்.) (நற்குணங்கள்) நிறைந்தவரால் (நற்குணங்களா லே) நிறைந்தவனென்றுசொல்லப்படுதலும்-எந்நாளும்நட்புக்கொண்டுகலந்தவரால்நட்புக்கொண்டுகலந்தவனென்றுசொல்லப்படுதலும் (தம்மேல்) பாய்ந்தெழுந்து (தஞ்சொல்லை) கொள்ளாதவரிடத்து (அவர்கள்) அங்கீகரியாதவைகளைச் சொல்லாதிருத்தலும் - ஆகியஇம்மூன்றும்நன்மையைஆளுகின்றவன்செல்லுகின்றவழிகளாம்-எ-று. (அஉ)

(ஒன்றலொன்று கேடுவது.)

உப்பின்பெருங்குப்பைநீர்படியினில்லாகும்
நட்பின்கொழுமுளைபொய்வழங்கினில்லாகும்
செப்பமுடையார்மழையனையார்—இம்மூவர்
செப்பநெறிதூராதவாறு

(இ-ள்.) உப்பினதுபெரியகுவியலானது (தன்னிடத்து) நீரானதுபடிந்தால்இல்லாமற்போம்- சினேகத்தினதுசெழித்தஆரம்பமானதுபொய்சொன்னால்இல்லாமற்போம்-நடுவுநிலைமையைஉடையவர்மேகத்தின்செய்கைபோல்உபகரிப்பார் - ஆகியஇம்மூன்று செய்கைகளும் செம்மையையுடைய வழியைத்தூராமைக்குச்சாதனங்களாம்-எ-று. (அங)

(நீர்நிரம்பாமை.)

மொய்ம்நன்கமையாக்குளனும்வயிறாரத்
தாய்முலையுண்ணாக்குழவியுஞ்-சேய்மரபிற்
கல்விமாண்பில்லாதமாந்தரும்—இம்மூவர்
நல்குரவுசேரப்பட்டார்

(இ-ள் நீர்வரும்வழிநன்றாகஅமைந்திராதகுளமும்) -தன் வயிறுநிரம்பத்தாயினதுமுலைப்பாலைஉண்ணாதகுழந்தையும்- இளமைப்பருவத்திற்கல்வியினதுமாட்சிமைபெறாத மனிதரும்ஆகியஇம்மூவரும்வறுமையால்சேரப்பட்டவராவர். ( )

(அரசர்களின் மேலாகிய ஏவலாளரின் தன்மை.)

எள்ளப்படுமரபிற்றாகலுமுள்பொருளைக்
கேட்டுமறவாதகூர்மையுமூட்டின்றி
யுள்பொருள்சொல்லுமுணர்ச்சியும்—இம்மூன்றும்
ஒள்ளியவொற்றாட்குணம்.

(இ-ள்.) (தனதுசெய்கைபகைவரால்) நன்குமதிக்கப்படாதமுறைமையையுடையதாதலும்- (அப்பகைவரிடத்து)நிகழ்ந்துள்ளபொருள்களைக்கேள்விப்பட்டு (பின) மறவாதகூர்ந்தஅறிவுடைத்தாதலும் (வாக்குக்கருத்துகளில்வைக்கப்பட்ட) அவ்வுள்ள பொருள்களைத் தடைபடுதலில்லாமல் (தன்னரசனுக்கு)சொல்லுகின்றதெளிவுடைத்தாதலும் - ஆகியஇம்மூன்றும்-அறிவுடையவேவுகாரனதுகுணங்களாம் எ-று (அரு)

(கேட்டை விளைவிக்கும் விதம்)

அற்றப்பெருந்தளை*யாப்பினைகிழ்ந்தொழிதல்
*கற்றுப்பெரும்புணைகாதலிற்கைவிடுதல்
நட்பினயநீர்மைநீங்கலிவைமூன்றும்
குற்றந்தரூஉம்பகை.

(இ-ள்.) (உயிர்களிடத்துத்தனக்குள்ள) அன்பாகியபெரியவிலங்கு (ஒருபொருளின்சம்பந்தத்தால்) தளர்ந்துநீங்குதலும் - கல்வியாகியபெரிய தெப்பத்தை (மண்-பொன்-பெண்-இவற்றின்மேலுள்ள) ஆசையாற்கைவிடுதலும - (ஒருவனிடத்துக்கொண்ட) சினேகத்தால்நீதித்தன்மையினின்றுமநீங்குதலும் ஆகிய இவைமூன்றும்-(மக்களுயிர்க்கு) துன்பஞ்செய்னவாம்-எ-று. (அசு)

* யாப்பு-கிரமம். * கற்பு-கல்வி.

(அறிவிலராகச்செய்பவை.)

கொல்வதுதானஞ்சான்வேண்டலுங்கல்விக்
ககன்றவினம்புகுவானும்இருந்து
விழுநிதிகுன்றுவிப்பானும்—இம்மூவர்
முழுமக்களாகற்பாலார்

(இ-ள்.) ஒருயிரைக்கொல்லுதற்குத்தான் அஞ்சாதவனாகி அதனைச்செய்யவிரும்புதலும்-கற்றற்பொருட்டு (கல்விப்புணர்ச்சியின்) நீங்கியகூட்டத்திற்பிரவேசிக்கின்றவனும்-(ஒருமுயற்சியும்செய்யாது) இருந்துமுன்புள்ளபெரியதிரவியத்தைக் குறையச்செய்பவனும் - ஆகியஇம்மூவரும் - மூடர்களாகுந்தன்மையையுடையவராவார்-எ-று. (அஎ)

(மனத்தின் வலியை நீக்குபவை.)

பிணிதன்னைத்தின்னுங்காற்றான்வருந்துமாறும்
தணிவில்பெருங்கூற்றுயிருண்ணுமாறும்
பிணைசெல்வமாண்பின்றியங்கல்-இவைமூன்றும்
புணையினிலைகலக்குமாறு.

(இ-ள்) வியாதியானது தன்னைவருத்தும்போது தான் அதற்குத்துன்புற்றுவருந்துகின்றவிதமும்-தாழ்வில்லாத பெரியயமனானவன்உயிரைக்கொண்டுபோகவருத்தாநின்ற விதமும் - விரும்பப்படுகின்றசெல்வமானது நிலையில்லாமல் நீங்கும் விதமும்(ஒருவனுக்குப்பிறவிக்கடற்கு)புணையாயுள்ள (மனத்தின்)நிலைமையைக்கலக்குகின்றவிதங்களாம்-எ-று. (அகூ)

+ பிணை-விருப்பம × மாண்பு-நிலைமை × புணை-தெப்பம்.

(மானிடராகியும் அஃதாகாதவர்.)

அருளினைநெஞ்சத்தடைகொடாதானும்
பொருளினைத்துவ்வான்புதைத்துவைப்பானும்
இறந்தின்னாசொல்லகிற்பானும்—இம்மூவர்
பிறந்தும்பிறந்திலாதார்.

(இ-ள்.) கிருபையைமனத்தில்நிறைத்துவையாதவனும்-திரவியத்தைத்(தானும்)அநுபவியாது(பிறர்க்குங்கொடாது) பூமியிற்புதைத்துவைக்கின்றவனும் - (தன்னிலை) கடந்து (பிறர்க்கு) துன்பத்தைத்தருஞ்சொற்களைச்சொல்லுகின்றவனும்-ஆகிய இம்மூவரும்-மனிதப்பிறப்பிற்பிறந்திருந்தும்பிறவாதவராவார்-எ-று. (அகூ)

(நரகிற்புகுதாவிதம்.)

ஈதற்குச்செய்கபொருளையறநெறி
சேர்தற்குச்செய்கபெருநூலை-யாதும்
அருள்புரிந்துசொல்லுகசொல்லை—இம்மூன்றும்
இருளுலகஞ்சேராதவாறு

(இ-ள்.) (பிறர்க்கு)கொடுக்கும்பொருட்டுத்திரவியத்தைத் தேடக்கடவன்- தருமமார்க்கம்தன்னைத்தேடிஅடைதற்பொருட்டு பெரியநூல்களைக் கற்கக்கடவன் - யாதாயினும்ஒருசொல்லைக்கிருபையைவிரும்பிச்சொல்லக்கடவன்-ஆகியஇம்மூன்றுசெய்கைகளும் - இருண்டஉலகாகியநரகத்தைச்சேரவொட்டாதவழிகளாம்-எ-று. (௯௪)

(பூததேகமுடையவரின் சுபாவம்)

*பெறுதிக்கட்*பொச்சாந்துரைத்தலுயிரை
யிறுதிக்கண்யாமிழந்தேமென்றன்—மறுவந்து
தன்னுடம்புகன்றுங்காணுதல்-இம்மூன்றும்
*மன்னுவுடம்பின்குறி.

(இ-ள்.) தம்மைப்பெற்ற தாய்தந்தையரிடத்துச்செய்ய வேண்டிய உதவிகளைமறந்துஅவரைஇகழ்ந்துபேசுதலும் - அவர்மரணம்அடைந்தவிடத்துஅத்தாய்தந்தையரைநாம்இழந்தோமென்றுஇரங்குதலும் - நோயடைந்து தனதுசரீரம்வருந்துமிடத்து (முன்புஅறஞ்செய்திலேமென்று)நாணுதலும் ஆகியஇம்மூன்றும்நிலைபெறாத உடம்புடையவரதுசெய்கைகளாம்-எ-று.-*பெறுதிக்கண்-தாய்தந்தையர். *பொச்சாந்து-மறதி. *மன்-நிலைமை. (௯௫)

(தோணேறியும் தோன்றாதவர்)

விழுத்* திணைத்தோன்றாதவனுமெழுத்தினை
யொன்றுமுணராதவேழையும்—என்றும்
இறந்துரைகாமுறுவானும்-இம்மூவர்
பிறந்தும்பிறவாதவர்.

(இ-ள்.) (தருமவொழுக்கங்களைப்பெறுதற்குரிய) சீரிய குலத்திலேபிறவாதவனும் - இலக்கண நூலைச்சிறிதாயினும் அறியாதஅறிவில்லாதவனும்-முறைகடந்தசொற்களைவிரும்புவானும் - ஆகியஇம்மூவரும்மக்கட்பிறப்பிற்பிறந்திருந்தும் பிறவாதவராவார்-எ-று. *திணை-இடம். (௧௨)

(நன்மைக்கு இடையூறுபடுத்துபவை)

இருளாய்க்கழியுமுலகமுமியாதுந்
தெரியாதுரைக்கும்வெகுள்வும்—பொருளல்ல
காதற்படுக்கும்விழைவும்-இவைமூன்றும்
பேதைமைவாழுமுயிர்க்கு.

(இ-ள்.) (அறிவில்லாதவருக்குஇடமாயிருத்தலால்)அந்தகாரமாய்நாள்கழிக்கின்றதேசமும்(நன்மைதீமைகளில்) சிறிதுந்தோன்றாதுபேசுகின்ற கோபிப்பும் - நற்பொருளல்லாதவைகளில்ஆசையைஉண்டாக்கும்பேராசையும்-ஆகியஇவை மூன்றும் - வாழுகின்றமக்களுயிர்க்குஅறியாமையைத்தருவதாம்-எ-று. (௧௩)

(நல்லொழுக்கம் இழக்கின்றவர்)

நண்பிலார்மாட்டுநசைக்கிழமைசெய்வானும்
பெண்பாலைக்காப்பிகழும்பேதையும்—பண்பில்
இழுக்கானசொல்லாடுவானும்- இம்மூவர்
ஒழுக்கங்கடைப்பிடியாதார்.

(இ-ள்.) சினேககுணமில்லாதவரிடத்து அன்புரிமையைச் செய்கின்றவனும்-மனைவியைக்காத்தலினின்றும்நீங்கிய அறிவில்லாதவனும்-குணமில்லாதகுற்றமானசொற்களைச்சொல்லுகின்றவனும்ஆகியஇம்மூவரும் (தமக்குரிய) நல்லொழுக்கத்தைஉறுதியாகப்பிடியாதவராவார்.எ-று. (கூச)

(அறியாமையைவிளைவிக்கும் மார்க்கம்)

அறிவழுங்கத்தின்னும்பசிநோயுமாந்தர்
செறிவழுங்கத்தோன்றும்விழைவுஞ்—செறுநரின்
வெவ்வுரைநோனாவெகுள்வும்- இவைமூன்றும்
நல்வினைநீக்கும்படை.

(இ-ள்.) தன்அறிவுகெடும்படி (அதனை) கெடுக்கின்றபசியாகியவியாதியும் - மனிதர்கள் (தன்னை) சேர்தல்கெடும்படி உண்டாகின்றபேராசையும் - பகைவருடையகொடியசொற்களைப்பொறாதகோபமும்-ஆகிய இவைமூன்றும் (ஒருவன்கொண்ட) நல்லறத்தை அழிக்கின்ற ஆயுதங்களாம்-எ-று. (கூரு)

(மழைபெய்யச்செய்யும் அதிகாரிகள்)

கொண்டான்குறிப்பறிவாள்பெண்டாட்டி-கொண்ட
செய்வகைசெய்வான் றவசிகொடிதொரீஇ [ன
நல்வகைசெய்வானரசன்-இவர்மூவர்
பெய்யெனப்பெய்யுமழை.

(இ-ள்) கொண்டகணவனுடையகுறிப்பினை அறிந்துநட க்கின்றவள் மனைவியாவாள் - தான்மேற்கொண்ட விரதங்க ளைச்செய்யும்விதிப்படி செய்கின்றவன் தவசியாவான் - தீங்கி னைநீக்கிஇதமானவைகளை (உயிர்களுக்குச்செய்கின்றவன்அர சனாவான் இவ்வியல்பினராகியமூவரும்பெய்யென்றுசொல்ல மழைபெய்யாநிற்கும்-எ-று. (௬௬)

(தருமமார்க்கமில்லாதவர்களின் செய்கை)

ஐங்குரவராணைமறுத்தலுமார்வுற்ற
எஞ்சாதநட்பினுட்பொய்வழக்கு—நெஞ்சமர்ந்த
கற்புடையாளைத்துறத்தலும்-இம்மூன்றும்
நற்புடையிலாளர்தொழில்.

(இ-ள்.) அரசன்-உபாத்தியாயன்-பிதா-தமையன்-ஆசாரி யன் - என்றுசொல்லப்பட்டஐந்து குரவர்களுடையஆக்கினை யைத்தடுத்துநடத்தலும் - விரும்பப்பட்டவைகளில்குறைவு படாமற்சினேகரிடத்துப்பொய்பேசுதலும் - தன்மனத்தால் விரும்பப்பட்டகற்பினையுடைய மனைவியைவிடுதலும்-ஆகிய இம்மூன்றும் அறத்தின்வகையில்லாதவருடைய தொழில்க ளாம்-எ-று. (௬௭)

(விதிப்படி பெய்யும்மழைக்கு ஆதாரம்)

செந்தீமுதல்வ ரறனினைந்துவாழ்தலும்
வெஞ்சினவேந்தன் முறைநெறியிற்சேர்தலும்
பெண்பால்கொழுநன் வழிச்செலவும்-இம்மூன்றும்
திங்கண்மும்மாரிக்குவித்து.

(இ-ள்.) வேள்வியைவளர்க்கின்றமுதற்குலமாயுள்ள அந்தணர் தருமத்தைச்செய்துவாழுதலும் - வெய்யகோபத்தையுடைய அரசன்நீதிநூலின்வழியிற்சேர்ந்துநடத்தலும் - பெண்ணானவள் தன்னாயகன்மனத்தின்வழிநடத்தலும்-ஆகிய இம்மூன்றுசெயலும்மாதந்தோறும் பெய்யவேண்டியமூன்றுமழைக்கும்-காரணமாம்.எ-று. (௫௮)

(தேவலோகத்திற்கு உரித்தல்லாதவர்).

கற்றாரைக்கைவிட்டுவாழ்தலுங்காமுற்ற
பெட்டாங்குசெய்தொழுகும்பேதையும்--முட்டின்றி
யல்லவைசெய்யுமலவலையும்-இம்மூவர்
நல்லுலகஞ்சேராதவர்.

(இ-ள்) கற்றவரைநீங்கிவாழ்வோனும்-விரும்பியவைகளை இச்சித்தபடியேசெய்துநடக்கின்றஅறிவில்லாதவனும் தடையில்லாமல் தீங்குகளைச் செய்கின்ற பேச்சுக்காரனும்-ஆகிய இம்மூவரும்-சுவர்க்கமுதலியவற்றிற்சேராதவராவார். (௫௯)

(அரசர்க்குவேண்டிய அங்கங்கள்)

பத்திமைசான் றபடையும்பலர்தொகினும்
எத்துணையுமஞ்சாவெயிலரணும்—வைத்தமைந்த
எண்ணினுலவாவிழுநிதியும்-இம்மூன் றும்
மண்ணாளும்வேந்தர்க்குறுப்பு.

(இ-ள்) (தன்மேல்) அன்புநிறைந்தசேனையும்—சத்துருக்கள் பலர் சேர்ந்தெதிரினும் எவ்வளவும் பயப்படாத மதிலரணும்-அளவுசெய்யின் (அவ்வளவைக்கு) அகப்படாமல் வைக்கப்பட்டுள்ளநிறைந்தசீரியசெல்வமும்-ஆகிய இம்மூன்றும் பூமியை ஆளுகின்றஅரசர்க்குஅங்கங்களாம்-எ-று. (ா)

திரிகடுகம் மூலமும் உரையும்

முற்றிற்று.

பெரியநாயகியம்மை துணை

# அரும்பதவிளக்கம்.

க-வது கவி. தொல்-பழமை-மாண்-பெருமை(௨)தா-கெடு
தல்(௩)காழ்-வைரம்(௪) பெற்றம்-பசு-கோடல்-கொள்ளுதல்
(௫) விழைவு-இச்சை (௬) செருக்கு-செல்வம் (௭) உள்ளல்
உள்ளான் என்னும் ஓர் பறவை - துஞ்சு - நித்திரை (௮)
வேந்து-அரசன்-அடு-கொலை (௯) விழு-சிறப்பு (௰) கணக்
காயர்-ஓதிவிப்போர் (௰௧) விளி-இராகம்-களி-கள் (௰௨)
கேள்-சிநேகம்(௰௩) வடு-குற்றம்-மாண்-பெருமை-யாண்டு-
இடம் (௰௪) வற்று-வல்லபம்-செறு-கோபம் (௰௫) பொறி-
இலக்குமி-தட்டை-உள்ளீடில்லா ஓர் கோல்-நட்கல் உறவு
(௰௬) கூவல்-கேணி (௰௭) பூப்பு-மாதருது-இலிங்கி-தவசி
போல்பவன் (௰௮) ஒருதலை-உறுதி-இன்னா-துன்பம் (௰௯)
எல்-இரவு-மறம்-கொலை-தூங்கு-மரணம் (௨௰) பாசம்-சுற்
றம்-மடி-சோம்பல்-கதம்-கோபம் (௨௧) வாயுள்-இலாபம்-
[illegible]-போர்-மாட்சி-பெருமை(௨௨)பற்று-அகப்பற்றுப்புறப்
பற்று-தளை-விலங்கு-அவா-ஆசை- அஃதாவது-பிறன்பொரு
ளைக்கவரநினைத்தல்-தெற்று-தெளிவு வீடு-விடுபடல் (௨௩)
கடிதல்-நீக்குதல் (௨௪) கணிகை-தாசி-தூண்டில்-மீன்கவ
ரும்ஒரூசி-தேனை - தவளை-யாழ்-வைரம்-ஆழ்ச்சி - அழுந்தல்-
அளறு-நரகம் (௨௫) செருக்கு-அகங்காரம்-அல்குல்-நிதம்பம்
தொடி-வளையல் - அறப்புறம்-தருமசத்திரம் - கைத்து-பொ
ருள்(௨௬) ஒல்வது-வறுமை-வல்லிதி-உறுதி-ஞாலம்-உயர்வு
(௨௭)பால்-பட்சம்-தூ-பரிசுத்தம்(௨௮)நோன்பு-தவம்-(௨௯)
கண்-இடம்-காதல்-ஆசை-நுண்-நுட்பம் (௩௰) நச்சு-விருப்
பம்-பொச்சாப்பு-மறதி-அழுக்காறு - பொறாமை (௩௧) முட்
டல்-[illegible]-சிரேட்டம்(௩௩) வீழ்-விழுது-விடல்-செலு
த்தல் (௩௪) அலவலை-புலப்பம் (௩௫) இயங்கல்-அலைதல்-

மேதை-அறிவு-மை-மயக்கம் (௩௬) வினை-ஊழ் (௩௭) குறளை-குறைவு-உறல்-பொருந்துதல்-சால்பு-நற்குணம் (௩௮) கொன்னே-வீணே-வெஃ்ல்-இச்சை (௩௯) புலை-நீசத்தன்மை-கலம்-எச்சில் (௪0) வெகுளி-கோபம் (௪௧) அலந்தார்-வருந்தினோர் (௪௨.) கழகம்-சூது (௪௩) திப்பியம்-தெய்வம் (௪௪) உரன்-அறிவு (௪௫) கரத்தல்-ஒளித்தல்-நிரயம்-நரகம் (௪௬) கால்தூய்மை-குதிரையின் ஐவகைநடை-அஃதாவது- மல்லகதி-மயூரகதி-வியாக்கிரகதி-விடபகதி-வானரகதி-கலி-கடிவாளம். கறுவு-கோபம்-பள்ளி-கல்விச்சாலை (௪௭) சில்-மிருதுவு (௪௯) எள்ளி-இகழ்ந்து (௫0) சலம்-பொய் (௫௧) சலவர்-பகைவர் (௫௨) கண்ணோட்டம்-தாட்சண்யம் (௫௩) கதழ்-விரைவு (௫௪) காய்வு-கோபம்-தெற்று-தெளிவு (௫௫) மறை-இரகசியம்-செற்றம்-வைரம்-தொழும்பு-ஏவலாளன்-ஒற்று- தூது (௫௬) விழுப்பம்-உயர்வு (௫௭) து-சோறு-துச்சு-ஒதுக்குக்குடி-கலம்-பாத்திரம் (௫௮) கிழமை-உரிமை (௫௯) கூழ்-பயிர் (௬0) புலம் அறிவு (௬௧) மாறு-பகை (௬௨) எச்சம்-பிள்ளை (௬௪) புறஞ்செய்தல்-காப்பாற்றுதல் (௬௬) கிறை-உதிரம்-கோல்-நீதி (௭௨) அல்பொருள்-பாவம் (௭௫) பொத்து-பொந்து (௭௬) மாற்றம்-சொல்-புரிந்து - விரும்பி (௭௭) கயவர்-மூடர் (௭௯) இல்-மனைவி (௮0) தேறு-தெளிவு-துாறு-புதர் (௮௧) வாசி-வட்டம் (௮௩) செப்பம்-நடுவுநிலைமை (௮௬) அற்பு-அன்பு-நயம்-நீதி (௮௯) துய்வல் அனுபவித்தல் (௯௨) எழுத்து-இலக்கணம்-ஏழை-அறிவிலான் (௯௫) அழுங்கல்-கெடுதல்-செறிவு-சேர்தல்-செறுநர்-பகைவர் (௯௬) ஒர் இ-நீங்கல் (௯௮) செந்நீமுதல்வர் - மூதற்குலமாகிய அந்தணர் (௯௯) பெட்டாங்கு-விரும்பியவைகள் (௱) எயிலரண்-மதிற்கோட்டை-உலவு-கெடுதல்-நிதி-செல்வம்-உருபபு-அழகம்.